## மூன்றும் அத்தியாயம்

# புலனடக்கத்தைப்பற்றி உபதேசம்

### 1

"இரண்டு* ஆத்மாக்களும் வெயிலும் நிழலும்போல் கூட இருந்துகொண்டு இதய குகையில், அதாவது உள்ளத்தின் அந்தரங்கத்தில் நற்கருமங்களின் பலன்களை அருந்திக்கொண்டு வீற்றிருக்கின்றன. வேதம் ஓதுபவர்களும் ஐந்து வேள்வித்தீ ஓம்புகிறவர்களும் மூவேள்வித்தீ ஓம்புகிறவர்களும் இவ்வாறே சொல்லுகிறார்கள்.

'ஐந்தீ' ஓம்புகிறவர்கள், 'மூவேள்விக்காரர்', 'வேதம் ஓதுபவர்' இப்பெயர்கள் உபநிஷத்து ஆக்கிய காலத்தில் நித்திய முறைகளிலும் கொள்கைகளிலும் வேறுபட்ட வேதாந்த சம்பிரதாயங்களைக் குறிக்கின்றன. எடுத்துச் சொல்லப்படும் விஷயத்தில் இவர்கள் அனைவரும் ஒரே அபிப்

ऋतं पिबन्तौ सुकृतस्य लोके
गुहां प्रविष्टौ परमे परार्धे ।
छायातपौ ब्रह्मविदो वदन्ति
पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः ॥ १ ॥



* ஜீவப்ரஹ்ம ஐக்ய ஞானத்துக்கு [illegible]

பிராயம் கொண்டவர்கள் என்று காட்டப்படு கிறது.

ஜீவாத்மாவும் பரமாத்மாவும், நிழலும் வெயி லும் போல என்று உவமை கூறப்படுகிறது. ஆத்மா என்று இதுவரையில் ஒருமையாகச் சொல் லப்பட்டு இங்கே இரண்டாகச் சொல்லப் படுவ தன் காரணம் சீடன் மனதில் தோன்றும் சந்தே கத்தைத் தீர்க்கவே. உலகத்திற்கே ஈசனாக நிற் கும் பொருளையும் மிகச் சிறியதான 'நான்' என் கிற பொருளையும் எவ்வாறு ஒன்றாக வைக்க முடி யும்? இந்தக் கேள்வி கிளம்பும். வெயிலுக்கும் நிழலுக்கும் உள்ள சம்பந்தம் போல் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது விடை. பரமாத்மா வெயில். அது எங்கும் பரவி நிற்கும் ஜோதிப் பொருள். அதுவே உண்மைப் பொருள். வெயி லின் வழியில் நிற்கும் பொருள் நிழலை உண்டாக்கு கிறது. வெயிலுக்கு ஏற்பட்ட தடை அல்லது குறையே நிழலின் வடிவத்தை உண்டாக்குகிறது. வெயிலுக்கு வடிவம் இல்லை. நிழலுக்கு வடிவம் உண்டு. ஆனால் வெயிலே ஒளிப்பொருள். ஒளி யின் குறைக்கு நிழல் என்று பெயர். வெயில் வேறு நிழல் வேறு அல்ல. தடைப்பட்ட வெயிலே நிழல் ஆகிறது. ஒரு குறையும் தடையுமின்றி நின் றால், வெயில் சமப் பிரகாசத்துடன் நிற்கிறது. தடைப்பட்ட இடத்தில் நிழல் தோன்றுகிறது. இவ்வாறே ஜீவாத்மா பரமாத்மாவின் நிழலாகும். தனிப்பொருளாகத் தோன்றினும் உண்மையில் அவ்வாறு அல்ல. தடையை நீக்கியவுடன் நிழலும் வெயிலும் ஒன்றாகிவிடும். மனிதனுடைய கர்ம பலன்களாகிய குணவிகாரங்கள் நிழலை ஆக்குகின் றன. பரமாத்மாவின் உண்மைச் சொரூபம் மறைந்து, நிழல் மாதிரி வியக்தி உணர்ச்சி

உண்டாகிறது. அதைத்தான் ஜீவாத்மா என்று வைத்துக்கொண்டு பேசுவது.

சேதன உள்ளமே பரமன் கோயில். அதைத் தான் உபநிஷத்துகளில் "குகை" என்று பல இடங்களில் சொல்லுவது. இக்குகையில் "இரண்டும்" இருக்கின்றன என்று சொன்னதின் நோக்கம் விஷயத்தை விளக்குவதற்காக. அறியாமை நீங்கி ஞானம் உதித்தவுடன் இரண்டும் ஒன்ருகும். அதுவரையில் இரண்டும் வேருக நிற்கும். உண்மையில் இரண்டும் ஒன்றே என்பதற்காக இரண்டும் ஒரே குகையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

மூன்ருவது முண்டக உபநிஷத்து முதல் காண்டத்தில், இரண்டு பறவைகள் ஒரே மரத்தில் இருப்பதாகவும், ஒன்று பழத்தைத் தின்பதாகவும், மற்ருென்று சும்மா பார்த்துக் கொண்டிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. பழத்தைத் தின்னும் பறவை ஜீவாத்மாவைக் குறிக்கிறது. சும்மா பார்த்துக் கொண்டிருக்கிற பறவை சாக்ஷி என்று சொல்லப்படும் பரமாத்மாவைக் குறிக்கிறது. பழம் என்பது கருமங்களின் பலன்.

## 2

"வேள்விகளைச் செய்பவர்கள் வேள்விகளின் மூலம் மரண பயத்தையும் வாழ்க்கைத் துயரங்களையும் தாண்டிவிடலாம் என்று கருதுகிருர்கள். ஆனல் ஆத்ம ஞானமே

**यः सेतुरीजानानामक्षरं ब्रह्म यत् परं ।**
**अभयं तितीर्षतां पारं नाचिकेतं शकेमहि ॥ २ ॥**

மரண ஜன்மங்களைத் தாண்டும் பாலம் என்று நான் சொல்லுவேன்.*

## 3—6

“உடலை ஒரு வண்டியாகவும் ஆத்மாவே வண்டியில் செல்லும் எஜமானனுகவும், புத்தியே வண்டியை ஓட்டும் ஆளாகவும், மனமே. குதிரைகளின் கடிவாளக் கயிருக வும் அறிவாயாக.

---

* இவ்விடத்தில் நாசிகேதம் என்ருல் ஆத்ம ஞானம் என்றே தோன்றுகிறது. இந்த அத்தியாயத்தில் மறுபடியும் வேள்வியைப்பற்றிச் சொல்ல யாதொரு காரணமுமில்லை.

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु ।
बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च ॥ ३ ॥

इन्द्रियाणि हयानाहुर्विषयांस्तेषु गोचरान् ।
आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनीषिणः ॥ ४ ॥

यस्त्वविज्ञानवान् भवत्ययुक्तेन मनसा सदा ।
तस्येन्द्रियाण्यवश्यानि दुष्टाश्वा इव सारथेः ॥ ५ ॥

यस्तु विज्ञानवान् भवति युक्तेन मनसा सदा ।
तस्येन्द्रियाणि वश्यानि सदश्वा इव सारथेः ॥ ६ ॥

வண்டியில் செல்லும் எஜமானனையே முதல் சுலோகத்தில் கர்ம பலன் உண்ணும் ஆத்மா என்று சொன்னது.

"நல்லறிவு பெறாதவன் கடிவாளக் கயிறாகிய மனதைச் சரியாகப் பிடிக்கமாட்டான். அதாவது, குதிரைகளாகிய புலன்களைக் கவனத்துடன் நடத்தமாட்டான். போக்கிரிக் குதிரைகளைப் பூட்டிய வண்டியைப் போல் வாழ்க்கை நடைபெறும்.

"நல்லறிவு பெற்றவன், மனம் என்ற கடிவாளத்தை சரியாகப் பிடித்து, நல்ல குதிரைகளை நல்ல சாரதி நடத்துவதுபோல் புலன்களை அடக்கி விஷயங்களுக்கு இடையில் உடலை நடத்துவான்.

## 7

"பகுத்தறிவற்றவன் மனதை அடக்கியாளாமல், எப்பொழுதும் மாசு பொருந்தியவனாகி, சேரவேண்டிய இடத்தைச் சேரமாட்டான். பரமபதம் போய்ச் சேருவதற்குப் பதில் ஸம்ஸாரத்தில் சுற்றிச் சுற்றி அலைவான்.

**यस्त्वविज्ञानवान् भवत्यमनस्कः सदाऽशुचिः ।**
**न स तत् पदमाप्नोति संसारं चाधिगच्छति ॥ ७ ॥**

ஸம்ஸாரம் என்ருல் பிறப்பும் இறப்பும் அதனிடையில் துக்கங்களுமாகிய முடிவிலாச் சுழல்.

## 8

“சரியாக ஓட்டிய ரதம் ஊர்போய்ச் சேர்வது போல், பகுத்தறிவு படைத்தவன் இடைவிடாத கவனத்துடன் மனதை அடக்கி உள்ளும் புறமும் சுத்தமாக நின்று, சீலத்தைக் காப்பாற்றிக்கொண்டு நித்தியமான பரமபதம் அடைவான்.

## 9

“நல்லறிவு என்ற சாரதியைப் பெற்றவன், அச்சாரதியைக் கொண்டு கடிவாளக் கயிருன மனதைச் சரியாகப் பிடித்துப் புலன்களை நடத்திப் பிரயாணத்தின் முடிவு, அதாவது விஷ்ணுபதம் என்ற பரமபதம் அடைவான்.

இரண்டாவது அத்தியாயம் 24-வது சுலோகத்தில் தனக்குள்ளே வீற்றிருக்கும் பரம்

**यस्तु विज्ञानवान् भवति समनस्कः सदा शुचिः ।**
**स तु तत् पदमाप्नोति यस्माद् भूयो न जायते ॥ ८ ॥**

**विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान् नरः ।**
**सोऽध्वनः पारमाप्नोति तद् विष्णोः परमं पदम् ॥ ९ ॥**

பொருளை மனிதன் கண்டு கொண்டு பரம பதம் அடைய வேண்டுமானல் புலனடக்கம் இன்றிய மையாதது என்று சொல்லப்பட்டது. இப்புல னடக்கம் என்னத்திற்கு, அதை எவ்வாறு பெற லாம் என்பது வண்டி ஓட்டும் உபமானத்தால் இந்த சுலோகத்தில் விளக்கப்பட்டது.

## 10—11

இந்த சுலோகங்களில் சுருக்கமாகப் புலன்களி னின்று பரமாத்மாவரையில் உயிரின் அமைப்பு சொல்லப்படுகிறது.

"ஐம்புலன்கள் ; அதன் மேல் அப்புலன் கள் வழிச்செல்லும் விஷய உணர்ச்சிகள் ; அதன்மேல் அவ்வுணர்ச்சிகளைக் கொள்ளும் மனம் ; அதன்மேல் மனத்தின் பின்னுல் நின்று அதை நடத்தும் புத்தி ; அதற்கும் மேல் 'நான்' என்ற தனிவியக்தி உணர்ச் சியுடன் நிற்கும் ஆத்மா (இதற்கு 'மகத்' என்றும் பெயர்). அதைத் தாண்டி நிற்ப தும் அதற்குக் காரணமுமான அவ்யக்தப் பிரம்மம். அதற்கும் ஆதாரமாக நிற்பது புருஷோத்தமன். அவனுக்கு மேல் ஒன்று

**इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः ।**
**मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान् परः ॥ १० ॥**

**महतः परमव्यक्तमव्यक्तात् पुरुषः परः ।**
**पुरुषान्न परं किंचित् सा काष्ठा सा परा गतिः ॥ ११ ॥**

மில்லை. அவனே பரம்பொருள், அவனை அடைவதே வீடு அல்லது மோக்ஷம்.

பரமாத்மாவை அடைவது என்ருல், ஒரு ஊரி லிருந்து வண்டியிலேறி அல்லது நடந்து போய்ச் சேருவதுபோல் அல்ல. அந்தராத்மாவும் அவனும் ஒன்று என்ற ஞானம் உண்டாகி, வெயிலும் நிழ லும் ஒன்ருகுதல்போல் அவனை அடைதல்.

## 12

யோகமுறை என்ன என்பது இனி சொல்லப் படும்.

"இந்தப் பரமாத்மா எல்லா உயிர்களிலும் மறைந்து நிற்கிருன். அவனை எல்லாரும் காணமுடியாது. ஆனுல் சிலர் யோகத்தால் காண்பார்கள். நுண்ணிய அறிவும் ஒன்று பட்ட கவனமும் செலுத்தி சூக்ஷ்ம தரிசி கள் தங்களுக்குள் வீற்றிருக்கும் பரமாத் மாவைக் காண்பார்கள்.

## 13

"ஞானம் படைத்தவன் பேச்சை மனதி னுள் அடக்கி, அதற்குப் பின் 'தான்' என்

एष सर्वेषु भूतेषु गूढो त्मा न प्रकाशते ।
दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥ १२ ॥

यच्छेद् वाङ्मनसी प्राज्ञस्तद् यच्छेज्ज्ञान आत्मनि ।
ज्ञानमात्मनि महति नियच्छेत् तद् यच्छेच्छान्त आत्मनि ॥ १३

கிற உணர்ச்சியையும் கூட விகற்பமற்ற சாந்த ஆத்மாவில் அடக்குவான்.

படிப்படியாக ஒன்றை மற்றொன்றில் அமரச் செய்து, முடிவில் வேற்றுமை உணர்ச்சியை நீத் தலேலயோகமுறை. அது இங்கே சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

## 14

வேற்றுமை உணர்ச்சியே மாயை. உண்மையில் பரனே உள்ளத்திலிருக்க, ஏன் அதை நாம் அறிய வில்லை? ஒளியே நிழலாகத் தோன்றுவது போல், பரமாத்மாவே மாசுகள் பொருந்திய நம்முடைய உள்ளமாகத் தோற்றம் காட்டுகிறது. இதைத் தான் மாயை என்று சொல்லுவது.

இந்த நிலே தூக்கத்திற்கு சமானமானது. அஞ் ஞானம் என்ற இந்தத் தூக்கத்தினின்று விழித் தெழுந்து குறையும் முடிவும் இல்லாத மகிழ்ச் சியை அடையச் சொல்லி இந்த சுலோகம் கூவு கிறது. சுலோகத்தின் பொருள்:—

"எழு! எழு! தூக்கத்தை விட்டு எழு! மேலோரை அணுகி கவனத்துடன் உப

**उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान् निबोधत ।**
**क्षुरस्य धारा निशिता दुरत्यया दुर्गं पथस्तत्**
**कवयो वदन्ति ॥ १४ ॥**

தேசம் கேட்டு ஞானம் பெறுவாயாக. கூர் பட்ட கத்திமுனைமேல் நடப்பதுபோல் யோகமார்க்கம் மிகவும் கடினம் என்று அறிந்தோர் சொல்லுவார்கள்.

இரவில் கனவு ஒன்று கண்டு அதில் தோன்றும் சம்பவங்களினால் துக்கப்படும் ஒருவனுக்கு என்ன நிவாரணம்? தூக்கத்திலிருந்து விழித்து எழுந்து, கனவைக் கனவென்று காண்பதே நிவாரண மாகும். அதுபோல் ஆத்மாவைப் பிடித்துள்ள வேற்றுமை உணர்ச்சியினின்று விழித்தெழுந்து, துக்கங்களினின்று விடுவித்துக் கொள்வாயாக, என்று உபநிஷத்து உபதேசிக்கிறது.

"எனது உள்ளத்தில் பரன் கோயில் கொண் டிருக்கிறான்" என்ற அறிவு, அடுத்த அறை யில் சுப்பன் இருக்கிறான் என்று சொல்லக்கேட்டு அறிந்துகொள்வது போல் அல்ல. தூக்கத்தி னின்று விழிப்பது போல் நிலையே முற்றும் மாற வேண்டும். தூக்கத்தினின்று விழிப்பது சுலபம். ஆனால் சம்ஸார மாயை என்ற தூக்கத்தினின்று விழிப்பது எளிதல்ல. அதற்கு விடுபட வேண்டும் என்கிற விருப்பம் உள்ளத்தில் பொங்க வேண்டுவ தன்றி, கத்திமுனைமேல் நடப்பதுபோல், இடை விடாத ஜாக்கிரதையுடன், புலன்களையும் மனதை யும் அடக்கிச் சீலத்தைக் காப்பாற்றி மனதையும் மாசற நிறுத்தி வேற்றுமை உணர்ச்சியைஅறவே நீக்கவேண்டும். அதுவே யோகம்.

## 15

"இறப்பினின்று தப்புவதற்கு, அதாவது சம்ஸார சாகரத்தினின்று விடுதலை பெறுவதற்கு, அடையவேண்டிய அறிவு, ஆத்மாவின் சொரூபத்தைப்பற்றிய நிச்சய ஞானம். ஆத்மாவானது ஐம்புலன்களுக்கு எட்டாது. அது நாற்றம், சப்தம், தீண்டல், காட்சி இவ் வழிகளால் புலப்படாது. அது அழிவற்ற பொருள்; என்றும் உளது; ஆதியந்தமற்றது. தனி உயிராகத் தோற்றம் கொடுக்கும் 'நான்' என்ற சேதனத்தையும் தாண்டிய பரம் பொருள். இதைக் கண்டவனே மரணத்தை வென்றவனுவான்.

## 16—17

யமனுடைய உபதேசம் அடங்கிய இந்த நசிகேத உபாக்யானத்தைச் சொல்லியும் கேட்டும் அறிவு அடைந்தவர்கள் பிரம்ம பதம் அடைவார்கள். வேதம் ஓதியவர்கள்

**अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् ।**
**अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचाय्य तन्मृत्युमुखात्**
**प्रमुच्यते ॥ १५ ॥**

**नाचिकेतमुपाख्यानं मृत्युप्रोक्तं सनातनम् ।**
**उक्त्वा श्रुत्वा च मेधावी ब्रह्मलोके महीयते ॥ १६ ॥**

சபையிலாவது தாய் தகப்பன்மார்களுக்குச் செய்யும் சிராத்தங்களிலாவது மறைந்து நிற்கும் பரம் பொருளைப்பற்றிய இந்த உபதேசத்தை எடுத்தோதச் செய்தவனும் உயர்ந்த பதவி அடைவான்.*

---

* இவ்வாறு பலனை எடுத்துக் காட்டும் சுலோகம் நூல்களின் முடிவில் வரும். இந்த சுலோகம் மூன்றாவது அத்தியாயத்தின் முடிவில் வருகிறபடியால் சிலர் இந்த உபநிஷத்தின் உருவம் எக்காரணமாகவோ முதலில் ஆக்கப்பட்டவாறு தற்போது இல்லை என்று எண்ணுகிறார்கள். மூன்றாவது அத்தியாயமே முடிவாக இருந்து, நாலு, ஐந்து, ஆறு இந்த அத்தியாயங்கள் பின்னால் சேர்க்கப்பட்டதாயிருக்கலாம் என்று ஊகிக்கிறார்கள். அப்படியல்லாமல் மூன்றாவது அத்தியாயமே பின்னால் சேர்க்கப்பட்டதாயுமிருக்கலாம். புதிதாகச் சேர்க்கப்பட்டதை ஊர்ஜிதப் படுத்த இந்த சுலோகத்தை எழுதியும் இருக்கலாம். ஆறு அத்தியாயங்களும் ஒரே ரிஷியினால் ஆக்கப்பட்டவையானாலும் சரி, அல்லது பல ரிஷிகள் வெவ்வேறு காலங்களில் ஆக்கியவையாயினும் சரி, மிகவும் புராதனமானதும் எல்லாராலும் மதிக்கப்பட்டதுமான இந்த நூலைப் பற்றி இத்தகைய ஐயங்களை இப்போது கிளப்பி நாம் கலவரப்பட வேண்டியதில்லை.

**य इमं परमं गुह्यं श्रावयेत् ब्रह्मसंसदि**
**प्रयतः श्राद्धकाले वा तदानन्त्याय कल्पते तदानन्त्याय**
**कल्पत इति ॥ १७**

## நாலாவது அத்தியாயம்

*இந்த அத்தியாயத்தின் உபதேசம்*

**உள்ளமே பரமன் கோயில்**

### 1

*அனாதியான பரம் பொருளினின்று மாயையின் பலனாகப் பலவேறு வகை உயிர்கள் உண்டாயின. வளரும் செடியிலிருந்து இலைகள் துளிர்ப்பதுபோல் உள்ளிருந்து வெளி நோக்கித் தோண்டிச் செல்லும் சக்தியினால் காது கண் முதலிய புலன்கள், அமைய நேர்ந்தன. வெளியே நோக்கும் தன்மையை புலன்கள் அடைந்திருக்கிறபடியால் வெளி விஷயங்களையே உணர்கின்றன. உள் நோக்கி அந்தராத்மாவை உணரும் சக்தியை அவை பெறவில்லை. ஆயினும் வெகு சில அறிவாளிகள் சுபாவத்தை மீறி இறவாமையை வேண்டித் தங்கள் அறிவை உள் நோக்கச் செய்து அந்தராத்மாவைக் காண்கிறார்கள்.*

**पराञ्चि खानि व्यतृणत् स्वयम्भू-**
**स्तस्मात् पराङ् पश्यति नान्तरात्मन् ।**
**कश्चिद् धीरः प्रत्यगात्मानमैक्ष-**
**दावृत्तचक्षुरमृतत्वमिच्छन् ॥ १ ॥**

பரம்பொருளின் சக்தியினுல் இந்திரியங்கள் உண்டாயின. உள்ளிருந்து வெளி நோக்கிச் செல்லும் சக்தியால் அமையப் பெற்ற புலன்கள் வெளி நோக்குகின்றன. பக்குவம் அடைந்த ஒரு சிலர்தான் சுபாவத்தை வென்று உள் நோக்கிப் பார்ப்பார்கள்.

## 2

அறியாமையில் மூழ்கி நிற்பவர்கள் புறப் பொருள்களை விரும்பி, அப்பொருள்களையே தொடர்ந்து செல்வார்கள். தொடர்ந்து சென்று எங்கும் பரந்து நிற்கும் காலன் பாசத்தில் சிக்கிக் கொள்வார்கள். உறுதியும் அறிவும் அடைந்தவர்கள் ஆத்மாவின் இறவாமையை அறிந்து அழியும் பொருள்களுக்கு இடையில் அடையக்கூடிய அழியும் இன்பத்தை விரும்பமாட்டார்கள்.

அறியாமையால் தூண்டப்பட்டு அநித்ய சுகங்களை அடைய விரும்புகிறோம். அதற்காக பல வினைகள் செய்கிறோம். விரும்பிய சுகங்களை அடையாததால், அல்லது அடைந்து இழந்ததால்

**पराचः कामाननुयन्ति बाला-**
**स्ते मृत्योर्यन्ति विततस्य पाशम् ।**
**अथ धीरा अमृतत्वं विदित्वा**
**ध्रुवमध्रुवेष्विह न प्रार्थयन्ते ॥ २ ॥**

கோபம், துவேஷம், துக்கம், இவைகளை உண்டாக்கிக் கொள்கிறோம். இதனால் முன்னைவிட அதிக அறியாமை விளைகிறது; அறியாமை அதிகரித்ததும் முன்னைவிட அதிக வேற்றுமை உணர்ச்சி உண்டாகிறது. அதனால் முன்னைவிட அதிக ஆசைகள் உண்டாகிறது. இவ்வாறு வர வர உண்மையினின்று விலகி வெகுதூரம் செல்வது அறியாமையின் பயன். அப்படிச் செல்லாமல் உண்மையை வரவர அணுகுவதே விடுதலை மார்க்கம். அதற்கு உள்ளமாகிய கோயிலிலிருக்கும் பரம் பொருளை தியானித்தல் அவசியம்.

## 3

பொருள்களைக் காண்பது எது? கண்கள் என்று எண்ணலாம். அப்படி அல்ல. உள்ளே தனி ஒரு பொருள் கண்களின் வழியாகக் காட்சி அடைகிறது. அத்தனிப் பொருளே காதின் வழியாக ஒலியை அடைகிறது. இவ்வாறே மற்றப் புலன்களும். ஆராய்ந்து பார்த்தால் கருவியாகிய புலனையும் அதனால் உண்டாகும் உணர்ச்சியையும் தவிர்த்து எந்தப் பொருள் எஜமானனாக மிஞ்சுகிறது? அதுவே நாம் ஆராயும் பொருள்.

**येन रूपं रसं गन्धं शब्दान् स्पर्शांश्च मैथुनान् ।**
**एतेनैव विजानाति किमत्र परिशिष्यते ।**
**एतद् वै तत् ॥ ३ ॥**

புலன்களுக்குப் பின் நிற்கும் மனமே பரம் பொருள் என்று எண்ணிவிடக்கூடும். இதற்கு அடுத்த சுலோகம் விடை தரும்.

## 4

மனிதன் விழித்தும் தூங்கியும் இருப்பான். விழித்தபோதும் தூங்கும்போதும் கண்டு, கேட்டு, தொட்டு அடைந்த விஷய உணர்ச்சிகள் எந்தப் பொருளின் மேல் தங்கித் தொடர்ச்சியறுமல் நிற்கின்றன? இந்த இடையறு உணர்ச்சிக்கு எது ஸ்தானம்? அந்தச் சேதனப் பொருளே **ஆத்மா**, அது வேற்றுமை அற்றது என்று உறுதியான அறிவு படைத்தவன் அறிவான். அறிந்து, வேற்றுமைகளால் உண்டாகும் துக்கத்தை நீப்பான்.

## 5

இவ்வாறு இன்பங்களை அருந்திக்கொண்டு உள்ளத்தில் வீற்றிருக்கும் **ஆத்மா**, நிகழ்ந்

**स्वप्नान्तं जागरितान्तं चोभौ येनानुपश्यति ।**
**महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ ४ ॥**

**य इमं मध्वदं वेद आत्मानं जीवमन्तिकात् ।**
**ईशानं भूतभव्यस्य न ततो विजुगुप्सते ।**
**एतद् वै तत् ॥ ५ ॥**

தன வருவன ஆகிய எல்லாவற்றிற்கும் எஜ
மானன். இதை அறிந்து யாதொரு பயமும்
கவலையுமில்லாமல் நிற்பான்.

ஏன்? அந்த அந்தராத்மாவே பரம் பொருள். அனைத்திலும் நிற்கும் பரம்பொருளே என் உள்ளத்திலிருப்பவன். அப்பொருளுக்கு வேற்றுமையோ அழிவோ கிடையாது என்று அறிந்த பின் பயம் ஏது?

நிகழ்ந்ததற்கும் வருவதற்கும் எஜமானன் என்றால், எல்லா சுகமும் துக்கமும் முடிவில் ஆத்மா அடையும் நிலையே தவிர வேறில்லை என்பது. எவ்வித வியாதிக்கிருமிகள் வந்து தாக்கி உள்ளே புகுந்தாலும் ஆரோக்கிய நிலையில் நிற்கும் தேகம் அவைகளால் பீடிக்கப்படமாட்டாது. தன் ஆரோக்கியத்திற்குத் தானே எஜமானனுகி தேகம் நிற்பதுபோல் ஞானமும் ஸ்திரபுத்தியும் அடைந்தவன் என்ன துக்க சம்பவம் வந்தாலும் அதனுல் பீடிக்கப்படமாட்டான். ஞானமடைந்தவனுடைய ஆத்மா நடைபெறும் நிகழ்ச்சிகளைத் திற்கும் எஜமானனுக நிற்கும்.

## 6

ஆதியில் நீர் முதலிய பஞ்ச பூதங்கள் உண்டாகும் முன்னமே பிரம்மத்தினின்று உண்டாகி, பிறகு எல்லா உயிர்களின் உள்

**यः पूर्वं तपसो जातमद्भ्यः पूर्वमजायत ।**
**गुहां प्रविश्य तिष्ठन्तं यो भूतेभिर्व्यपश्यत ।**
**एतद् वै तत् ॥ ६ ॥**

ளத்திலும் புகுந்து நின்று, ஒவ்வொரு உணர்ச்சியிலும் கலந்து நிற்கும் சேதனப் பொருளை ஒருவன் தனக்குள் காணவேண்டும். கண்டால் அதுவே பரம் பொருள் என்று அறிவான்.

7

எப்பொருள் உயிருடன் கூடவே உளதாகி உள்ளத்து அந்தரங்கத்தில் குடியிருந்து கொண்டு ஒவ்வொரு புலன் வழியாகவும் உணர்ச்சிகளை அநுபவித்து வருகிறதோ அதுவே பரம் பொருள்.

8

தாயின் வயிற்றில் மறைந்து காப்பாற்றப் படும் கருப்போலும், தீக்கடையும் அரணியில் மறைந்திருக்கும் தீயைப்போலும், உயிர்களின் உள்ளத்தில் பரம்பொருள் மறைந்து

या प्राणेन संभवत्यदितिर्देवतामयी ।
गुहां प्रविश्य तिष्ठन्तीं या भूतेभिर्व्यजायत ।
एतद् वै तत् ॥ ७ ॥

अरण्योर्निहितो जातवेदा गर्भ इव सुभृतो गर्भिणीभिः ।
दिवे दिव ईड्यो जागृवद्भिर्हविष्मद्भिर्मनुष्येभिरग्निः ।
एतद् वै तत् ॥ ८ ॥

நிற்கிறது. அரணியிலிருந்து தீயைக் கடைந் தெடுப்பதுபோல் உள்ளத்திலிருந்து பரம் பொருளைக் கடைந்து காணப் பெறலாம்.

அரணி என்பது முற்காலத்தில் தீ எடுக்க உபயோகித்த கடையந்திரம்.

## 9

சூரியன் உதித்தும் மறைந்தும் வருகிருன். எங்கிருந்து வருகிருன்? எங்கே போகிருன்? உயிரின் எல்லா அகப் புலன்களும் அவ்வாறே தோன்றியும், மறுபடி ஆத்மாவில் மறைந்தும் வருகின்றன. உள்ளிருக்கும் ஆத்மாவை மிஞ்சியது எதுவும் இல்லை. அதுவேயாகும் நாம் ஆராயும் பரம்பொருள்.

## 10

அங்கிருப்பதும் இங்கிருப்பதும் அனைத்தும் ஒரு பொருளேயாகும். வேற்றுமை உணர்ச்சி கொண்டவன் இறந்து இறந்து

यतश्चोदेति सूर्योऽस्तं यत्र च गच्छति ।
तं देवाः सर्वे अर्पितास्तदु नात्येति कश्चन ।
एतद् वै तत् ॥ ९ ॥

यदेवेह तदमुत्र यदमुत्र तदन्विह ।
मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ॥ १० ॥

அலேவான். நான், நீ, அது, அவன், இது, இவன் என்று வேறுபட்ட அனைத்தும் ஒரு பொருளே. இந்த ஞானம் அடையாத வரையில் மரணமும் சம்சார சக்ரமும் நீங்காது.

## 11

நாம் காண்பது அனைத்தும் ஒன்றே, பரம் பொருள் தவிர வேறு ஒன்றும் இல்லை; இதை நன்ருக மனதில் பதிய வைக்க வேண்டும். வேற்றுமை உணர்ச்சி கொண்டவன் இறந்து பிறந்து ஜன்மச் சுழலில் சுழலவேண்டியதே கதி.

## 12

குறுகிய உருவம் கொண்டு புருஷோத்தமன் தேகத்தின் மத்தியில் இருக்கிறுன். நடந்தன, வரப்போவன அனைத்துக்கும் ஈசன்; அதாவது எல்லா சம்பவங்களும் சுக துக்கங்களும் தான் கொண்ட நிலையைப்

**मनसैवेदमाप्तव्यं नेह नानास्ति किंचन ।**
**मृत्योः स मृत्युं गच्छति य इह नानेव पश्यति ॥ ११ ॥**

**अंगुष्ठमात्रः पुरुषो मध्य आत्मनि तिष्ठति ।**
**ईशानो भूतभव्यस्य न ततो विजुगुप्सते ।**
**एतद् वै तत् ॥ १२ ॥**

பொருந்தி நிற்கும். இதை அறிந்தவனுக்குக் காப்பு வேண்டியதில்லை ; கவலை கிடையாது.

கட்டை விரலின் அளவு என்றால், அந்த ஸ்தூல அளவு அல்ல ; தனக்கென்று தனி இடம் எடுத்துக் கொள்ளாதவாறு என்றே பொருள்.

## 13

கட்டை விரல் அளவாக, புகை இல்லாமல் எரியும் தீபக் கொழுந்துபோல் உள்ளத்தினுள் நிற்பது பரம்பொருள். உண்டானது, உண்டாவது இரண்டிற்கும் எஜமானன். காலத்தினால் இப்பொருளுக்கு மாறுபாடு கிடையாது. இன்றிருக்கும் நிலையே நாளையும். ஒவ்வொரு விநாடியிலும் மாறுபட்டு வரும் உடலில், இடையறாத, ஒன்றான தன்மை பொருந்திய இதுவே நாம் ஆராயும் பரம் பொருள்.

ஆராய்ச்சி செய்பவர்கள் உயிரைப் பற்றி இரண்டு விதமான கொள்கைகள் கொள்ளலாம் : ஒன்று, நிமிஷத்திற்கு நிமிஷம் மாறும் நினைவுகளும் உணர்ச்சிகளும் அடங்கிய தொகுதியை நிலையுள்ள ஒரு தனிப் பொருளாக வைத்துக் கொள்ளக்கூடாதாகையால், ஆத்மா என்ற ஒரு பொருள் இல்லை ; இரண்டாவது, மரணம் கண்டதும் இந்த உடற்

अंगुष्ठमात्रः पुरुषो ज्योतिरिवाधूमकः ।
ईशानो भूतभव्यस्य स एवाद्य स उ श्वः ।
एतद् वै तत् ॥ १३ ॥

தொகுதி கலந்து போனதாகும். உயிர் நீத்தபின் ஒன்றுமே மிச்சம் கிடையாது. இந்த இரண்டு கொள்கைகளும் இந்த சுலோகத்தில் கண்டிக்கப் படுகின்றன.

## 14

மலைமேல் பெய்த மழையானது பலவாறு கப் பிரிந்து மலைச்சாரலில் பல திக்குகளில் ஓடுவதுபோல், ஒரே பரம்பொருள் பல ஜீவன்களாகச் செல்லுகிறது. இதைப் பார்த்து விட்டு உண்மையை அறியாமல், அறிவில்லாதவனுடைய மதியானது வேற்று மையையே பின்தொடர்ந்து ஓடிச் செல்லும்.

முன் சுலோகத்தில் சொன்ன உபமானம் வேறு; இந்த சுலோகத்தில் நீரை வைத்துச் சொல்லும் உபமானம் வேறு.

## 15

சுத்த நீருடன் சுத்த நீரைக் கலந்தால், இரண்டும் ஒன்றாகவே சேர்ந்துவிடும்.

यथोदकं दुर्गे वृष्टं पर्वतेषु विधावति ।
एवं धर्मान् पृथक् पश्यंस्तानेवानुविधावति ॥ १४ ॥

यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति ।
एवं मुनेर्विजानत आत्मा भवति गौतम ॥ १५ ॥

அதைப்போல் ஞானம் அடைந்த ஆத்மா பரம்பொருளை உள்ளத்தில் கண்டதும் வேற்றுமை அற்று அதனுடன் ஒன்ருகி விடுகிறது.

உடலுணர்ச்சிகளன்றி ஆத்மா என்ற பொருள் ஒன்றுமில்லை, உயிர் நீத்ததும் ஒன்றும் மிச்சமில்லை என்பது தவறு. ஜீவராசிகள் அனைத்திலும், பிரிவும் அழிவும் வேற்றுமையுமற்ற பரம் பொருளே உள்ளத்தில் நின்று பலவகைப்பட்ட தோற்றங்களைக் கொடுக்கிறது. ஆகையால் வேற் றுமை உணர்ச்சியை அகற்றி, தனித்த ஒரே பொருளாகிய பரம் பொருளைக் கண்டு, அதனில் கலந்து வீடு அடைவாயாக, என்பது இந்த அத்தி யாயத்தில் அடங்கிய உபதேசத்தின் சாராம்சம்.

## ஐந்தாம் அத்தியாயம்

# அந்தராத்மா வேற்றுமையற்று மாசற்றது

1

நீ ஒரு நல்ல அரசனால் காக்கப்பட்ட பதினோறு வாயில் படைத்த ராஜதானியில் இருக்கிறாய். அவ்வரசன் பிறப்பற்றவன். அவனுடைய அறிவு கோணாது. அவனை நீ பக்தியுடன் அடைந்து தைரியமாக இருப்பாயாக. அவனை அடைந்தால் துயரம் நீங்குவாய். வேறு பற்றுகளை விட்டு அவனை அடைந்தாயானால் பிறப்பு இறப்பினின்று விடுபடுவாய்.

உடலை வெறும் உடல் என்று எண்ணாதே. அது ஈசனை அரசனாக வீற்றிருக்கும் ஒரு கோட்டை. உனக்கு என்ன கவலை? என்ன துயரம்? கோட்டையினுள் கோயிலிலிருக்கும் அரசனை சரணடைந்து நிற்பாயாக. அதாவது, பரமாத்மாவைத்

पुरमेकादशद्वारमजस्यावक्रचेतसः ।
अनुष्ठाय न शोचति विमुक्तश्च विमुच्यते ।
एतद् वै तत् ॥ १ ॥

தியானித்து உபாசிப்பாயாக. ஆசைப் பற்றுக்களைத் துறந்து விடுபட்டாயானால், மறு பிறப்புகளினின்று விடுபடுவாய். பரமாத்மா உன் உள்ளத்தினுள் அரசு புரிகிறான், புறத்தில் நீ காணும் எல்லாப் பொருளிலும் அவனே இருக்கிறான். இது அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

## 2

அவன் சூர்யனாக சுத்தமான ஆகாய மண்டலத்தில் செல்லுகிறான். அந்தரக்ஷத்தில் எங்கும் பரந்து நிற்கிறான். யாக வேதியிலும் அவனே அக்னியாகக் காணப்படுகிறான். மனிதன் உள்ளத்திலும் அவனே அந்தராத்மா. எல்லா தேவர்களின் உள்ளத்தில் நிற்பவனும் அவனே. சத்தியமும் அவனே. ஆகாயமும் அவனே. நீரில் உண்டாகும் எல்லாப் பிராணிகளும் பொருள்களும் அவனே. பூமியில் உண்டாகும் எல்லாப் பிராணிகளும் பண்டங்களும் அவனே. வேள்விப் பயன்களும் அவனே. மலையில் உண்டாகி ஓடும் ஆறுகளும் அவனே. வேறுபட்ட அனைத்தும் அவனே. ஆயினும்

हंसः शुचिषद् वसुरन्तरिक्षसद्
होता वेदिषदतिथिर्दुरोणसत् ।
नृषद् वरसदृतसद्व्योमसदब्जा गोजा
ऋतजा अद्रिजा ऋतं बृहत् ॥ २ ॥

அவன் வேற்றுமை யற்றவன். அனைத்தும் அடங்கப்பெற்ற பெரும் பொருள்.

## 3

உடலினுள் மூச்சு மேலே கிளம்பி, மறுபடி கீழ் இறங்கச் செய்வதும் அவனே. உடலின் மத்தியில் குறுகிய மூர்த்தியாக இதயத்தில் வீற்றிருந்து எல்லா அகப்புலன்களாலும் உபசரிக்கப்பட்டு நிற்பதும் அவனே.

ஜீவனுக்கு இன்றியமையாத வாயு ஓட்டமும் புலன் உணர்ச்சிகளும் உள்ளே வீற்றிருக்கும் ஆத்மாவின் சக்தியே யன்றி வேறல்ல. இதை இன்னும் விளக்கிக் கீழே சொல்லப்படுகிறது.

## 4—5

உடலுக்குள் தங்கி நிற்கும் இந்தப் பொருள் வெளியேறிவிட்ட பின் உடலைப்

ऊर्ध्वं प्राणमुन्नयत्यपानं प्रत्यगस्यति ।
मध्ये वामनमासीनं विश्वे देवा उपासते ॥ ३ ॥

अस्य विस्रंसमानस्य शरीरस्थस्य देहिनः ।
देहाद् विमुच्यमानस्य किमत्र परिशिष्यते ।
एतद् वै तत् ॥ ४ ॥

न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।
इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥ ५ ॥

பார்! என்ன மிஞ்சுகிறது? ஜீவ சக்தி ஒன்றும் இன்றி உடல் சவமாகக் கிடக்கும். எதுவின்றி உயிர் தன் சக்திகள் முழுதும் அற்றுப் போகிறதோ அந்தப் பொருளே நாம் ஆராயும் பரம் பொருள். பிராணி உயிருடன் இருப்பதற்குக் காரணம் மேலும் கீழும் இயங்கும் மூச்சு அல்ல. உட்புகும் மூச்சு வெளிவரும் மூச்சு இரண்டும் வேறொன்றை ஆதரவாகப் பற்றி இயங்குகின்றன. அந்தப் பொருளே உயிர்களுக்கு உயிர்.

## 6

ஏ கௌதமனே! கேளாய்! முன்னோர் கண்ட ரகஸ்யத்தை உனக்கு விளக்குகிறேன். மரணம் அடைந்ததும் பிராணியின் ஆத்மா என்ன ஆகிறது என்பதைச் சொல்லுகிறேன்.

## 7

மரணம் கண்டதும் உடலைவிட்டுப் பிரியும் ஆத்மாவானது அதுவரை அவ்வுடலைக்

**हन्त त इदं प्रवक्ष्यामि गुह्यं ब्रह्म सनातनं ।**
**यथा च मरणं प्राप्य आत्मा भवति गोतम ॥ ६ ॥**

**योनिमन्ये प्रपद्यन्ते शरीरत्वाय देहिनः ।**
**स्थाणुमन्येऽनुसंयन्ति यथा कर्म यथा श्रुतं ॥ ७ ॥**

கொண்டு செய்யப்பட்ட செயல்களையும் அடைந்த ஞானத்தையும் ஒட்டி, அதன் பயனாக வேறு தேகங்களைத் தேடி ஜீவராசிகளின் கருப்பைகளுக்குள்ளாவது புகும். செய்த கருமங்களின் பலனுக்கும் அடைந்த ஞானத்திற்கும் தக்கவாறு மறு பிறப்பு அடையும்.

## 8

உடலினுக்குள் எந்தப் பொருள் தூங்கும் போதும் விழித்தபோதும் தான் விரும்பினவாறு செயல்கள் செய்துகொண்டு இடையறுமல் செல்லுகிறதோ அதுவே சுத்த ஆத்மா. அதுவே பிரம்மம் என்றும், மரணமற்ற பொருள் என்றும் சொல்லப்படும். அனைத்தும் அதைப்பற்றி நிற்கிறது. ஏதும் அதுவன்றி முடியாது. அதைக் கடந்து எதுவும் செல்ல முடியாது. அதுவே நாம் ஆராயும் பரம்பொருள்.

य एष सुप्तेषु जागर्ति कामं कामं पुरुषो निर्मिमाणः ।
तदेव शुक्रं तद् ब्रह्म तदेवामृतमुच्यते ।
तस्मिँल्लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन ॥
एतद् वै तत् ॥ ८ ॥

## 9

ஒரே நெருப்பானது தனக்கு இடமாகப் பற்றிக் கொண்ட ஒவ்வொரு பொருளின் வடிவத்திற்கும் தக்கவாறு வெவ்வேறு வடிவம் எடுத்துக்கொண்டு விளங்குகிறது. அவ்வாறே ஒரே பரமாத்மா எல்லா ஜீவராசிகளுக்கும் அந்தராத்மாவாக நின்று, வெவ்வேறு வடிவங்களாக விளங்குகிறது. அவ்வாறு விளங்கியபோதிலும், உண்மையில் அது வேறு, வடிவங்கள் வேறு.

வேற்றுமை உணர்ச்சியை நீக்கி, எங்கும் பரந்து நிற்கும் ஒரு பொருளின் தன்மையைச் சீடன் உணர்வதற்காகப் பல வழிகளில் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. ஒரு மரக் கட்டையும் எரிகிறது; ஒரு விளக்கும் எரிகிறது; ஒரு காடும் தீப் பற்றி எரிகிறது. அவை அனைத்திலும் தீயானது வெவ்வேறு வடிவங்களில் காணப்படுகிறது. தீயின் வடிவம் பொருள்களினால் வேறுபட்டது போல் தோன்றினும், உண்மையில் வேறுபாடு கிடையாது. அவ்வாறே பலவேறு வடிவங்களில் காணப்படும் பரம்பொருள் ஒன்றே ஆயினும், அது பல உடல்களைப் பற்றி நின்று வேற்றுமைகளைக் காட்டுகிறது. உள் நிற்கும் பொருள் ஒன்றே என்பதை உணர வேண்டும்.

**अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।**
**एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ ९ ॥**

## 10

காற்றானது பல பொருள்களுக்குள் நின்று, பலவேறு வடிவங்களாகத் தோற்றம் காட்டுகிறது. அவ்வாறே எல்லாப் பிராணி களிலும் ஒரு அந்தராத்மாவே தங்கி நிற் கிறது. அது வடிவங்களை மீறிய பொருள். வடிவம் வேறு, அது வேறு.

## 11

இது வரையில் பரம்பொருளின் ஒருமையைப் பற்றிச் சொல்லப்பட்டது. இனி, பரம்பொரு ளின் மாசற்ற தன்மை விளக்கிக் காட்டப்படு கிறது.

சூரியன் உலகம் அனைத்திற்கும் கண். அனைத்துக்கும் ஒளி தந்து அவைகளை விளங் கச் செய்கிறான். மாசின்மீது வீசிய ஒளி யானது பொருளை விளங்கக் காட்டுமே அல்லாமல், தீண்டிய மாசினால் ஒளியானது பழுதுபடாது. மாசற்றே நிற்கும். அவ்

वायुर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ १०

सूर्यो यथा सर्वलोकस्य चक्षु-
र्न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः।
एकस्तथा सर्वभूतान्तरात्मा
न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥ ११ ॥

வாறே எல்லா ஜீவன்களுக்கும் அந்தராத்மா வாக நிற்கும் பரம்பொருளானது உலகத்தின் சுக துக்கங்ளால் மாசடையாமல் சுத்தப் பொருளாகவே நிற்கும்.

எல்லா உடல்களில் நிற்பதும் அதுவே என்ற பின், அவ்வுடல்கள் படும் துக்கம் அனைத்தும் அதைப் பீடிக்கும் அல்லவா என்ற கேள்வி பிறக்கிறது. சுக துக்கங்கள் உயிரைத் தீண்டும், ஆயினும் உயிருக்குக் காரணமாக நிற்கும் மெய்ப்பொருள் அதனல் பாதிக்கப்படமாட்டாது. அஞ்ஞானத்தால் உண்டான வேற்றுமை உணர்ச்சி நீங்கியவுடன் மெய்ப்பொருளின் மாசற்ற தன்மை தானகவே விளங்கும். பழுதை பாம்பாக நினைக்கப்படுமேயல்லாமல், பழுது பாம்பாகவே மாறுபடாது என்றபடி.

## 12

ஒரே ஆத்மா, அனைத்துக்கும் எஜமானன். எல்லா உயிர்களுக்குள்ளும் நிற்பவன். தன்னைப் பல வடிவங்களாகச் செய்துகொண்டு விளங்குபவன். இவனை அறிவு படைத்தவன் தன் உள்ளத்திற்குள் காண்பான். அவ்வாறு ஒன்றாகக் கண்டவன் முடிவற்ற இன்

एको वशी सर्वभूतान्तरात्मा
एकं रूपं बहुधा यः करोति ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरा-
स्तेषां सुखं शाश्वतं नेतरेषाम् ॥ १२ ॥

பம் அடைவான். காணுதவனுக்கு இன்பம் கிடையாது.

சர்வ ஜீவராசிகளுக்குள்ளும் ஒரே பரமாத்மா தான் நிற்பது என்பதை ஒருவன் கண்டு, தனக்குள் நிற்பது பரம்பொருளே என்கிற ஞானத்தை அடைந்தவுடன் விடு பெற்ருன்.

இந்த ஞானம் அடைவதே மோக்ஷத்திற்கு மார்க்கம். அதைப் பூரணமாக அடைவது முடியாதாயினும், அரைகுறையாக நாம் அடைந்தாலும் அதனுல் மாசுகள் நீங்கப் பெற்று நற்குணங்களை அடைவோம். வாழ்க்கையில் நாம் செய்யப் போகும் பல பாவச் செயல்களினின்று தப்புவோம்.

ஸ்ரீபகவத் கீதை 6-வது அத்தியாயம் 29-31 சுலோகங்களைப் பார்க்க.

## 13

அழியும் பொருள்களுக்குள் என்றும் நிற்கும் பொருள் இதுவே. பலவேறு உணர்ச்சிகளிலும் இதுவே உணரும் சக்தி. இப்பொருளே விருப்பங்களை அடைந்ததாக உணர்வது. இந்தத் தனி யொரு சக்தியைத் தம் உள்ளத்தில் கண்டோர் அதுவே பரம்

नित्योऽनित्यानां चेतनश्चेतनाना-
मेको बहूनां यो विदधाति कामान् ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरा-
स्तेषां शान्तिः शाश्वती नेतरेषाम् ॥ १३ ॥

பொருள் என்றும் அறிவார். அவ்வாறு அறிந்தவர்களுக்குத்தான் சாந்தி. மற்றவர் களுக்கு சாந்தி கிடையாது.

## 14

உள்ளத்தில் நிற்கும் அந்தராத்மாவே குறிப்பிட முடியாத பரம்பொருள் என்பார்கள் பெரியோர்கள். அதுவே ஆனந்தப் பொருள். என் உள்ளத்தில் நான் கண்ட இந்த அந்தராத்மாவானது தன் ஒளியாலேயே பிரகாசிக்கிறதா? அல்லது, வேறு ஒரு பரம்பொருளின் ஒளியை அது வீசுகிறதா? இதை நான் எவ்வாறு கண்டு சொல்ல முடியும்?

## 15

இப் பொருளுக்கு சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல் இவைகளால் உண்

तदेतदिति मन्यन्तेऽनिर्देश्यं परमं सुखं ।
कथं नु तद्विजानीयां किमु भाति विभाति वा ॥ १४ ॥

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम्
नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं
तस्य भासा सर्वमिदं विभाति ॥ १५ ॥

டாகும் ஒளி வேண்டியதில்லை, நாம் வைத்து வளர்க்கும் இந்தத் தீ அதனுக்கு என்ன செய்யும்? அனைத்தின் ஒளியும் அப் பரம் பொருளின் ஒளியே. எல்லாம் அந்த ஒளி யின் எதிரொளியே அன்றி வேறு அல்ல.

என் உள்ளத்தில் தங்கி நிற்கும் அந்தராத்மா வும் பரம்பொருளின் பிரகாசமே அன்றி வேறல்ல.

## ஆருவது அத்தியாயம்

# பற்றறுத்தலே விடுதலைக்கு வழி

1

*இந்த சம்சாரம் என்ற பெரிய அசுவத்த மரம், வேர் மேலும் கிளைகள் கீழுமாக அமைந்திருக்கிறது. அதன் வேர் சுத்த ஒண் பொருளான பிரம்மமே. அதுவே மரணமற்ற பொருள், அமிருதம் என்பது. உலக மெல்லாம் அதனுல் தாங்கப் பெற்று நிற்கிறது, ஏதும் அந்தப் பரம்பொருளை அன்றி இல்லை.*

*அமிருதம் என்பது, அந்தராத்மாவுக்கு ஆகு பெயர். முன் ஐந்தாவது அத்தியாயத்தில் 8-வது சுலோகத்தைப் பார்க்க.*

*அசுவத்த மரத்தைப்பற்றி பகவத்கீதை 15-வது அத்தியாயத்தில் முதல் மூன்று சுலோகங்கள் பார்க்க.*

**ऊर्ध्वमूलोऽवाक्शाख एषोऽश्वत्थः सनातनः ।**
**तदेव शुक्रं तद् ब्रह्म तदेवामृतमुच्यते ।**
**तस्मिँल्लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन ।**
**एतद् वै तत् ॥ १ ॥**

## 2

உலகம் முழுதும் அப்பொருளினின்று உண்டானது. அனைத்தும் அப்பொருளின் ஆதிக்கத்துக்கு அஞ்சித்தான் செல்லுகின் றன. ஓங்கிய வஜ்ராயுதம் போன்ற அந்த ஆதிபத்தியத்தின் கீழ் உலகம் பயந்து நிற் கிறது. உலகத்தில் அனைத்தும் அந்த ஆட் சிக்கு அடங்கியது. இதை அறிந்தவனே மெய்ப்பொருளுடன் கலந்து இறவாமை அடைவான்.

## 3

அப்பராசக்தியின் ஆட்சிக்கு பயந்தே அக்னி எரிகிறது. அதற்கு அஞ்சியே சூரி யனும் வெம்மிப் பிரகாசிக்கிருன். மழை பெய்வதும் காற்று வீசுவதும் அந்த ஆதிபத் தியத்திற்கு அடங்கியே தான். காலன் உயி ரைக் கொள்வதும் அந்தப் பரம் பொருளின் அரசுக்கு அடங்கியே தான்.

அக்னி, சூரியன், இந்திரன், வாயு, எமன், என்று உலக சம்பவங்களை ஐந்து வகையாகப்

**यदिदं किंच जगत् सर्वं प्राण एजति निःसृतम् ।**
**महद्भयं वज्रमुद्यतं य एतद् विदुरमृतास्ते भवन्ति ॥ २ ॥**

**भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः ।**
**भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः ॥ ३ ॥**

பிரித்து, அனைத்தும் ஈசனுடைய செங்கோல் முறை என்று சொல்லப்பட்டது. உயிரை இழக்க மனம் வராமல் மரணத்தைக் கண்டு உடல் அஞ்சுவதுங்கூட அந்தச் செங்கோல் முறையின் பயத்தின் எதிரதிர்ச்சியாகவே கொள்ளலாம்.

## 4

உயிர் நீப்பதற்கு முன்னமே ஒருவன் ஞானம் அடைந்தானானால், சம்ஸாரத்தினின்று விடுதலை அடைவான். இல்லாவிடில் மறுபடியும் உடல்களை அடைவான்.

## 5

மனிதப் பிறவியில் பரம்பொருளைக் கண்ணாடியில் காணும் உருவத்தைப் போல் காணலாம்; பித்ரு லோகத்தில் கனவினில் காணும் உருவங்களைப் போல் காணலாம்; கந்தர்வ லோகத்தில் நீரில் காணும் உருவம்

**इह चेदशकद् बोद्धुं प्राक् शरीरस्य विस्रसः ।**
**ततः सर्गेषु लोकेषु शरीरत्वाय कल्पते ॥ ४ ॥**

**यथादर्शे तथात्मनि**
**यथा स्वप्ने तथा पितृलोके ।**
**तथाप्सु परीव ददृशे तथा गन्धर्व-**
**लोके छायातपयोरिव ब्रह्मलोके ॥ ५ ॥**

போல் காணலாம்; பிரம்ம லோகத்தில் வெயிலில் நிழலைப் போல் காணலாம். *

மனித ஜன்மத்தில் பரமாத்மாவைப் பற்றிய ஞானம் அடைவதற்குவழி தன் உள்ளத்தில் தங்கி நிற்கும் அந்தராத்மாவை உபாஸிக்க வேண்டும். அது பரம் பொருளின் ஒளி தங்கிய உருவம். அதற்கு உபமானம் கண்ணாடியில் காணும் உருவம். பித்ரு லோகத்திலும் கந்தர்வ லோகத்திலும் கனவிலும் நீரிலும் காணும் உருவங்கள் போல் என்றால், நன்றாக உருப்படாமல் இருக்கும் என்பது ஸ்ரீ சங்கராச்சாரியார் உரை. பிரம்ம லோகத்தில் நிழல்போல் என்றால், அங்கேயுங்கூட பரம் பொருள் தன் உண்மை நிலையை அடையவில்லை, உண்மையின் நிழல்தான் என்றவாறு.

---

* இந்த சுலோகத்தின் பொருள் விளங்கவில்லை என்றே சொல்லவேண்டும். ஸ்ரீ சங்கராச்சாரியருடைய உரையும் பொருளைத் தெளிவாக விளக்கவில்லை. சாந்தோக்ய உபநிஷத்தில் இந்திரனும் விரோசனனும் பிரஜாபதி ரிஷியிடம் உபதேசம் பெறச் சென்றதாகவும், அவருடைய சொல்படி ஆத்மாவைக் கண்ணாடியிலும் நீரிலும் கனவிலும் காணப்பார்த்ததாகச் சொல்லப் படுகிறது. அந்தக் கதையையும் உபதேசத்தையும் வைத்துப் பார்த்தாலும் இந்த சுலோகத்தின் பொருள் சரியாக விளங்கவில்லை.

## 6

புலன்களின் வழியாக அடையும் உணர்ச்சிகளை ஆராய்ந்து பார்த்தால், அவை விழித்திருக்கும் போது உண்டாவதும், தூங்கும் போது முற்றும் மறைந்து போவதுமாக, காண் கிறோம். புலன்கள் மறைந்து போவதை தோன்றியும் கவனித்தால், அவை மூலசக்தி களல்ல என்பதும், அவைகளினின்று ஆத்மா வேறுபட்ட பொருள் என்பதும் காணப் பெறலாம். ஆத்மாவைப் பற்றிய அறிவை சரியாக அடைந்தவன் துயரத் தைக் கடந்து நிற்பான்.

புலன்களின் வழியாக அடையும் உணர்ச்சிகளை நன்றாகக் கவனித்தால், அவைகளை அடையும் வேறொரு தனிப்பொருள் உள்ளத்தில் இருப்பதை உணரலாம். புலன்கள் விழித்திருக்கும்போது வேலை செய்யும். தூங்கும்போது இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகின்றன. ஆயினும் "நான்" என்கிற உணர்ச்சி இடையறுமல் நிற்கிறது. மனிதர்கள் கூடினால் சந்தை. மனிதர்களைத் தவிர்த்து சந்தை வேறு இல்லை. ஆனால் உடலும் புலன்களும் அவ்வாறல்ல. கூட்டமின்றி சந்தை இல்லாதது போல், புலன்கள் கலைந்ததும் "நான்" இல்லையென்று சொல்ல முடியாது. "நான்" என்கிற உணர்ச்சி சந்தைக்கு இல்லை. மனிதன்

**इन्द्रियाणां पृथग्भावमुदयास्तमयौ च यत् ।**
**पृथगुत्पद्यमानानां मत्वा धीरो न शोचति ॥ ३ ॥**

உள்ளத்தில் அந்த உணர்ச்சி இருக்கிறது. அதற்கு ஆதாரமாக ஒரு சேதன சக்தி இருக்கவேண்டும்.

மனிதனுக்கு அடிக்கடி உண்டாகும் சந்தேகம் இதுவே. சந்தேகம் தீரத் திருப்தி செய்து கொண்டாலுங் கூட, மறுபடி மறந்து போகும். உடலும் புலன்களும் தவிர்த்து, வேறு ஒரு பொருள் தனக்குள் உண்டா என்பதை உறுதியாகத் தீர்த்துக் கொண்டால், ஞானமும் பக்தியும், சத்தியமும் பாப பயமும் தேயாமல் நிற்கும். அதற்காகவே உபநிஷத்துக்காரர் ஆத்மாவைப் பற்றி வெவ்வேறு விதமாக ஆராய்ச்சி செய்து காட்டுகிறார்.

## 7—8

மூன்றும் அத்தியாயம் 10-11-வது சுலோகங்களில் சொன்னது இவ்விடம் திரும்பச் சொல்லப் படுகிறது.

இந்திரியங்களைக் கடந்தது மனம். மனதைக் கடந்தது புத்தி. புத்தி அல்லது ஸத்வம் என்பது மனதைச் செலுத்தும் உருப்புக்குப் பெயர். ஸத்வத்தையும் கடந்த

**इन्द्रियेभ्यः परं मनो मनसः सत्वमुत्तमम् ।**
**सत्त्वादधि महानात्मा महतोऽव्यक्तमुत्तमम् ॥ ७ ॥**

**अव्यक्तात् तु परः पुरुषो व्यापकोऽलिङ्ग एव च ।**
**यं ज्ञात्वा मुच्यते जन्तुरमृतत्वं च गच्छति ॥ ८ ॥**

பொருள், அதாவது எந்தப் பொருளுக்குப் புத்தியானது தொண்டு செய்கிறதோ அது, 'மகத்' என்று சொல்லப்படும் ஆத்மா. 'மகத்' துக்கு மேல் அவ்யக்தப் பொருள். அவ்யக்தத்தைக் கடந்தும் நிற்பது பரமன் அல்லது புருஷோத்தமன். அவன் எங்கும் பரவி, இலக்கணத்துக்கு அடங்காமல் நிற்கிறான். அவனைத் தனக்குள் கண்டவன் வீடும் இறவாமையையும் அடைந்தவனாவான்.

## 9

பார்வைக்கு அடங்காத அவன் உருவம் கண்களுக்குப் புலப்படாது. இதயத்தில் கலக்கமற்று நிற்கும் புத்தியாலும் சஞ்சலமற்ற மனதாலும் தியானத்தாலும் உணரப் பெறலாம். அவ்வாறு உணர்ந்தவர்கள் இறவாமை அடைவார்கள்.

न सन्दृशे तिष्ठति रूपमस्य
न चक्षुषा पश्यति कश्चनैनम् ।
हृदा मनीषा मनसाभिक्लृप्तो
य एतद् विदुरमृतास्ते भवन्ति ॥ ९ ॥

## 10 — 11

ஐந்து அறிவுகளும் அடங்கி நின்று மனமும் சஞ்சலமற்று நின்று, புத்தியும் கலங்காமல் நின்றால், உத்தம யோக நிலையாகும். புலன்களைத் திடமாக அடக்குவதே யோகம் என்பார்கள். அப்போது கவனம் ஏற்படும். யோகம் தோன்றி மறைவது இயல்பு.

புத்தியின் வேகம் மனதின் மேல் செல்லும். யோக நிலையடைய மூன்றும் கலக்கமற்று அடங்க வேண்டும். அப்போது தான் இந்திரியங்கள் சரிவர அடங்கப் பெறும். இல்லாவிடில் திரும்பத் திரும்பக் கலக்கம் ஏற்படும். இடையறாத கவனத்துடன் புத்தி, மனம், இந்திரியங்கள் இவைகளை அடக்கவேண்டும். இத்தகைய யோக நிலை அடைந்தால் உள்ளத்தில் மறைந்து நிற்கின்ற ஆத்மாவைக் காணலாம். ஆனால் அடையப் பெற்ற ஆத்ம ஞானம் சூரியனுடைய உதயாஸ்தமனம் போல் உதயமாகி, மறுபடி மறைந்து, மறுபடியும் உதயமாகியும் மறுபடி மறைந்தும்தான் காணலாம். யோக நிலையை ஒரே வாக்காக வைத்துக் காப்பாற்றுவது முடியாது. ஆத்மாவை யோகி காண்பான். அக்காட்சி தீர்ந்ததும் மாயையில் கிடக்கும் உலகத்துக்குத் திரும்பி வருவான்.

यदा पञ्चावतिष्ठन्ते ज्ञानानि मनसा सह ।
बुद्धिश्च न विचेष्टते तामाहुः परमां गतिम् ॥ १० ॥

तां योगमिति मन्यन्ते स्थिरामिन्द्रियधारणाम् ।
अप्रमत्तस्तदा भवति योगो हि प्रभवाप्ययौ ॥ ११ ॥

மறுபடி யோக நிலையை அடையலாம். அவ்வாறு உயிருள்ள வரையில் நடக்கும். ஆத்மாவைக் கண்டதும் 'தான்' என்பது அற்றுப்போகும். ஆனால் உயிருள்ள வரையில் 'தான்' என்ற உணர்ச்சி திரும்பத் திரும்ப வரும்.

**योगोहि प्रभवाप्ययौ** என்பதற்கு இந்தப் பொருள் கூறலாம் என்று என் அபிப்பிராயம். ஆனால் இதற்கு ஸ்ரீ சங்ராச்சாரியார் உரையில் ஆதாரம் இல்லை.

## 12

இந்தப் பொருளானது மொழி, காட்சி, எண்ணம் இவைகளுக்கு அடங்கப் பெறாத பொருள். அவனவன் தன் உள்ளத்தில் இதைக் கண்டே "ஆம், உண்டு" என்று சொல்ல முடியும். இப்பொருள் வேறு விதத்தில் உணர்ச்சிக்கு எட்டாதது.

புலன்கள் வழி உணரப்படும் உலகத்திற்கு மூல காரணம் இருக்கவேண்டும் என்பது உறுதியாயினும், அந்த மூலகாரணம் புலன்களுக்குப் புலப்படாது. அது மனதாலும் பிடிபடாது. யோக நிலையை அடைந்தே காணப் பெறலாம். வேறு வழி இல்லை.

**नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुषा ।**
**अस्तीति ब्रुवतोऽन्यत्र कथं तदुपलभ्यते ॥ १२ ॥**

## 13

அலைத்துக்கும் காரணமான பரம் பொருள் ஒன்று இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு ஒருவன் வரலாம். இவ்வாறு உறுதியாக உண்மையை உணர்ந்தால் காண வும் பெறலாம்.

எப்பொருளைப் பற்றியாவது உண்டு-இல்லை என்கிற அறிவு உண்டாகும் இடமே ஆத்மாவான படியால் அதைப் பற்றிய அறிவுக்கு வேறு இட மில்லை. கண்மூலம் பொருளைக் காணலாம். ஆனால் கண்ணையே கண்ணானது காணமுடியா ததுபோல், புலன் உணர்ச்சியும் மனதும் புத்தி யும், 'நான்' என்ற ஆத்ம உணர்ச்சியும் அனைத் துமே உள் நிற்கும் மூலப்பொருளின் மருவிய உருவங்களானபடியால், அதைக் கொண்டு அதையே சாதாரண முறையில் காணப்பெற முடி யாது, கருதவும் முடியாது. இவ்வாறு அறிவுக்கு எட்டாப் பொருளை எஆப்படி அடைவது என்பது கீழே சுருங்கச் சொல்லப்படும்.

## 14

இதயத்தைப் பற்றி நிற்கும் எல்லா விருப் பங்களும் நீங்கப் பெற்றால், மனிதன் இறவா நிலை அடைந்து பிரம்மத்தை அடைவான்.

**अस्तीत्येवोपलब्धव्यस्तत्वभावेन चोभयोः ।**
**अस्तीत्येवोपलब्धस्य तत्वभावः प्रसीदति ॥ १३ ॥**

**यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिताः ।**
**अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते ॥ १४ ॥**

விருப்பங்கள் நீக்கியவுடன் ஆத்மா தானைகப் பிரகாசிக்கும், கனவும் தூக்கமும் நீங்கி விழித்தெழுந்தாற்போல் விளக்கம் உண்டாகும்.

## 15

இதயத்தைக் கட்டுப் படுத்தும் முடிச்சுகள், அதாவது பற்றுக்கள், மோகங்கள், 'நான்,' 'எனது' முதலியன நீங்கியதும் பிரம்மத்தை மனிதன் அடைவான்; இது உறுதி.

விருப்பங்கள் நீங்க, பற்றுகள் நீங்கும். பற்று நீங்க விருப்பங்கள் நீங்கும்.

## 16

இதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் வெளிக் கிளம்புகின்றன. இந்த நூற்றொரு நாடிகளுக்குள் ஒன்று பிரம்மத்தை அடையும். மற்றவையனைத்தும் பல வேறு ஆசைகளைப் பற்றி நிற்கும். அவைகளைத் தொடர்

**यदा सर्वे प्रभिद्यन्ते हृदयस्येह ग्रन्थयः ।**
**अथ मर्त्योऽमृतो भवत्येतावदनुशासनम् ॥ १५ ॥**

**शतं चैका च हृदयस्य नाड्य-**
**स्तासां मूर्धानमभिनिःसृतैका ।**
**तयोर्ध्वमायन्नमृतत्वमेति**
**विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति ॥ १६ ॥**

ந்து ஜீவன் வெளியேகினுல், விடுதலை அடைய மாட்டான். ஒரு நாடி உச்சித் தலைவழி செல்கிறது. அதன் வழியே தான் ஆத்மா பிரம்மத்தை அடையும்.

மற்ற நாடிகளின் வழி ஜீவன் வெளியேகுவது என்ருல், ஆசைகளுடனும் பற்றுகளுடனும் உடல் நீப்பது என்று பொருள். மெய்ப் பொருளை அடையும் விருப்பமே நூற்ரேராவது நாடியாகச் சொல்லப்பட்டது.

## 17

புருஷோத்தமன் தன் உருவத்தைக் குறுக்கிக்கொண்டு மனிதன் உள்ளத்தில் எப்போதும் இருக்கிருன். சோகைகளை எடுத்தெரிந்து நாணலைப் பிரித்தெடுப்பது போல், உறுதியான மனோ நிலையுடன் உள்ளத்தில் வீற்றிருக்கும் பரம்பொருளை மூடி மறைக்கும் பற்றுக்களை ஒன்ரென்ருகக் கழற்றிக் கழற்றித் தள்ளிப் பரம் பொருளைத்தன் உள்ளத்தினில் கண்டு அடையவேண்டும். மாசற்றதும் இறவாததுமான மெய்ப் பொருள் அதுவே காண், அதுவே காண்.

अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः ।
तं स्वाच्छरीरात् प्रवृहेन्मुञ्जादिवेषीकां धैर्येण ।
तं विद्याच्छुक्रममृतं तं विद्याच्छुक्रममृतमिति ॥ १७ ॥

இருதரம் சொல்லி முடிப்பது நூல் முற்றிற்று என்பதைக் காட்டவும் முடிவை உறுதிப் படுத்தவும்.

## 18

இவ்வாறு எமனால் யோக முறைக்கு வேண்டிய விதிகளும் மெய்ப் பொருளைப் பற்றிய அறிவும் உபதேசிக்கப் பெற்று நசிகேதன் ஆசை, கலக்கம், மயக்கம் முதலியன தீர்ந்து, பிரம்ம நிலை அடைந்து, எமனிடமிருந்து திரும்பினான். தன்னைத் தான் கண்டுகொண்ட எவனும் நசிகேதனைப் போலவே விடுபெறுவான்.

ஆக, இந்த உபநிஷத்தின் சாரம்:

சிற்றின்பங்களினாலும் இகச் சுகங்களினாலும் மனிதன் திருப்தி அடைய முடியாது. உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் ஆத்மாவைக் காண்பதே நிலையான இன்பம்.

உடலே உயிரல்ல, புலன்களின் வழி உண்டாகும் உணர்ச்சிகளே உயிர் என்று எண்ணுவதும் தவறு. அனைத்துக்கும் காரணமாயும் ஆதாரமாயும், உயிருக்கும் உயிரான வேறு ஒரு சேதனப் பொருள் மறைந்து நிற்கிறது. அதுவே பரம்

मृत्युप्रोक्तां नाचिकेतोऽथ लब्ध्वा
विद्यामेतां योगविधिं च कृत्स्नम् ।
ब्रह्मप्राप्तो विरजोऽभूद् विमृत्यु-
रन्योऽप्येवं यो विदध्यात्ममेवम् ॥ २८ ॥

பொருள். அது மனிதன் உள்ளத்திலேயே இருந்தாலும் ஆசைப் பற்றுகளினால் மறைந்து கிடக்கிறது. அதன் தரிசனம் பெற அறிவுமட்டும் போதாது. புலன்களை அடக்கும் மனதை சாந்த நிலையில் நிறுத்தி பற்றுகளை ஒன்றொன்றாகக் களைந்து உள்நோக்கித்தியானம் செய்யவேண்டும். இதுவே யோகம். புலன்களும் மனமும் திரும்பத் திரும்ப மயக்கத்தினுள் செல்லும். அவ்வாறு செல்ல விடாமல், யோகத்தில் நின்றால் வேற்றுமை'உணர்ச்சி அற்றுப்போய் 'நான்' என்பது பரம் பொருளில் கலந்து ஒன்றுபட்டுப் போகும். அதுவே விடுதலை.

## 19

ओं सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै ।
तेजस्वि नावधीतमस्तु मा विद्विषावहै ॥

ओं शान्तिः । शान्तिः । शान्तिः ॥

## ஸ்லோக முதற் குறிப்பகராதி

(எண்—பக்க எண்)


| | |
|---|---|
| अग्निर्यथैको भुवनं | 82 |
| अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा | 99 |
| अङ्गुष्ठमात्रः पुरुषो ज्योतिः | 74 |
| अङ्गुष्ठमात्रः पुरुषो मध्य | 73 |
| अजीर्यताममृतानामुपेत्य | 28 |
| अणोरणीयान् महतो | 47 |
| अनुपश्य यथा पूर्वे | 10 |
| अन्यच्छ्रेयोऽन्यदुतैव | 30 |
| अन्यत्र धर्मादन्यत्राधर्मात् | 42 |
| अरण्योर्निहितो जातवेदा | 71 |
| अविद्यायामन्तरे वर्तमाना | 33 |
| अव्यक्तात् तु परः पुरुषो | 93 |
| अशब्दमस्पर्शमरूपं | 64 |
| अशरीरं शरीरेषु | 49 |
| अस्तीत्येवोपलब्धव्यः | 97 |
| अस्य विस्रंसमानस्य | 79 |
| आत्मानं रथिनं विद्धि | 57 |
| आशाप्रतीक्षे सङ्गतं | 12 |
| आसीनो दूरं व्रजति | 48 |
| इन्द्रियाणां पृथग्भावं | 92 |
| इन्द्रियाणि हयानाहुः | 57 |
| इन्द्रियेभ्यः परा ह्यर्था | 60 |
| इन्द्रियेभ्यः परं मनो | 93 |
| इह चेदशकद् बोद्धुं | 90 |
| उत्तिष्ठत जाग्रत प्राप्य | 62 |
| ऊर्ध्वमूलोऽवाक् शाख | 88 |
| ऋतं पिबन्तौ | 54 |
| एको वशी सर्वभूतान्तरात्मा | 84 |
| एतच्छ्रुत्वा संपरिगृह्य | 41 |
| एतत्तुल्यं यदि | 24 |
| एतदालम्बनं श्रेष्ठं | 45 |
| एतद्ध्येवाक्षरं ब्रह्म | 44 |
| एष तेऽग्निर्नचिकेतः | 20 |
| एष सर्वेषु भूतेषु | 61 |
| ओं उशन् ह वै | 7 |
| कामस्याप्तिं जगतः | 39 |

जानाम्यहं शेवधिरित्यनित्यं 37
तदेतदिति मन्यन्ते 86
तमब्रवीत्प्रीयमाणो 18
तां योगमिति मन्यन्ते 95
तिस्रो रात्रीर्यदवात्सीः 13
तं दुर्दर्शं गूढं 40
तं ह कुमारं सन्तं 7
त्रिणाचिकेतस्त्रयमेतद् 19
त्रिणाचिकेतस्त्रिभिरेत्य 19
दूरमेते विपरीते 32
देवैरत्रापि विचिकित्सितं किल 23
देवैरत्रापि विचिकित्सितं पुरा 22
न जायते म्रियते वा 45
न तत्र सूर्यो भाति न 86
न नरेणावरेण प्रोक्त 35
न प्राणेन नापानेन 79
न वित्तेन तर्पणीयो 27
न सन्दृशे तिष्ठति 94
न सांपरायः प्रतिभाति 34
नाचिकेतमुपाख्यानं 64
नायमात्मा प्रवचनेन 49
नाविरतो दुश्चरितान्नाशान्तो 50
नित्योऽनित्यानां चेतनः 85
नैव वाचा न मनसा 96
नैषा तर्केण मतिरापनेया 37
पराचः कामाननुयन्ति 67
पराञ्चि खानि व्यतृणत् 66
पीतोदका जग्धतृणा 8
पुरमेकादशद्वारं 77
प्र ते ब्रवीमि तदु 16
बहूनामेमि प्रथमो 9
भयादस्याग्निस्तपति 89
मनसैवेदमाप्तव्यं 73
महतः परमव्यक्तं 60
मृत्युप्रोक्तां नाचिकेतोऽथ 100
य इमं परमं गुह्यं 65
य इमं मध्वदं वेद 69
य एष सुप्तेषु जागर्ति 81
यच्छेद्वाङ्मनसी 61
यतश्चोदेति सूर्यो 72
यथादर्शे तथात्मनि 90
यथा पुरस्तात् 14
यथोदकं दुर्गे वृष्टं 75
यथोदकं शुद्धे शुद्ध 75
यदा पञ्चावतिष्ठन्ते 95
यदा सर्वे प्रभिद्यन्ते 98
यदा सर्वे प्रमुच्यन्ते 97

यदिदं किंच जगत्सर्वं 89
यदेवेह तदमुत्र 72
यस्तु विज्ञानवान्भवति
युक्तेन 57
यस्तु विज्ञानवान्भवति
समनस्कः 59
यस्त्वविज्ञानवान्भवत्यम-
नस्कः 58
यस्त्वविज्ञानवान्भवत्ययुक्तेन 57
यस्मिन्निदं विचिकित्सन्ति 29
यस्य ब्रह्म च क्षत्रं च 52
या प्राणेन संभवति 71
ये ये कामा दुर्लभा 25
येन रूपं रसं गन्धं 68
येयं प्रेते विचिकित्सा 22
योनिमन्ये प्रपद्यन्ते 80
यः पूर्वं तपसो जातं 70
यः सेतुरीजानानां 56
लोकादिमग्निं तमुवाच 18
वायुर्यथैको भुवनं 83
विज्ञानसारथिर्यस्तु 59
वैश्वानरः प्रविशत्यतिथिः 11
शतं चैका च हृदयस्य 98
शतायुषः पुत्रपौत्रान् 24
शान्तसङ्कल्पः सुमना 13
श्रवणायापि बहुभिर्यो 34
श्रेयश्च प्रेयश्च मनुष्यं 31
श्वोभावा मर्त्यस्य 26
स त्वमग्निं स्वर्ग्यं 15
स त्वं प्रियान् प्रियरूपांश्च 32
सर्वे वेदा यत्पदमामनन्ति 43
स होवाच पितरं 8
सूर्यो यथा सर्वलोकस्य 83
स्वप्नान्तं जागरितान्तं 69
स्वर्गे लोके न भयं 15
हन्त त इदं प्रवक्ष्यामि 80
हन्ता चेन्मन्यते 46
हंसः शुचिषद्वसु 78

